Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55



**முக்கியம்**

உடை மாறுவது முக்கியமல்ல உள்ளம் மாறுவதும், உயர்ந்த கருத்துக்கள் உள்ளத்தில் பதிவதும் தான் முக்கியம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**நன்றி**

நன்றி என்பது பயனடைந்தவர்கள் காட்ட வேண்டிய கடமை.

தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 28 - 5 - 1984 திங்கள் வெளியீடு 29 - 5 - 1984 செவ்வாய் இதழ்: 221

## தமிழ்நாட்டில் பஞ்சாப் போன்ற நிலைமையை உருவாக்க தி.மு.க.வினர் திட்டமிட்ட முயற்சி:

## நாகை, நன்னிலம், திருவாரூர் தாலுகாக்களில்

## கழகத் தொண்டர்கள் மீது

# தி.மு.க.வினர் வெறி தாக்குதல்

## கருணாநிதி பேச்சின் விளைவால் வன்முறை: கழக கொடிகள் கிழிப்பு

திருவாரூர், மே 28- தமிழ்நாட்டில் பஞ்சாப் போன்ற நிலைமையை உருவாக்குவோம்' என்று கருணாநிதி பேசினார் அல்லவா? இதை உறுதிப்படுத்தும் வகையில் தமிழகத்தின் பல பகுதிகளில் தி.மு.கவினர் வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்.

தஞ்சை மாவட்டத்தில் பல பகுதிகளில் திமுகவினர், திகவினர் கழகத் தோழர்களை தாக்கியும் கழக கொடிகளை கிழித்தும் வன்செயலில் ஈடுபட்டுள்ளனர்.

இடைத்தேர்தலுக்கு முன்பு சென்னை அண்ணா நகர் தொகுதியில் கருணாநிதி பேசுகையில் "பஞ்சாப் மாநிலத்தில் நிலவும் நிலைமையை போன்று தமிழகத்திலும் உருவாக்குவோம்" என்று பேசினார்.

இவ்வாறு பேசுவது நாட்டின் ஒற்றுமையை சீர்குலைப்பதாகவும், வன்முறைக் கலவரங்கள் ஏற்பட வழிகோலும் எனவும், அகில இந்திய இந்திரா காங்கிரஸ் செயலாளர் கருப்பையா மூப்பனார் கண்டனம் தெரிவித்திருந்தார்.

ஆனால் அதன்பிறகு மயிலாடுதுறையில் பேசிய கருணாநிதி போலீஸ் நிலையங்கள் முன்பு மறியல் செய்வோம் என்று பேசினார்.

வன்முறை கலவரங்களில் ஈடுபடும் தி.மு.கவினரை போலீசார் கைது செய்கிறார்கள்.

சட்டம்-ஒழுங்கை நிலைநாட்ட போலீசார் தக்க நடவடிக்கைகளை எடுக்கிறார்கள். ஆனால் கருணாநிதியோ, தி.மு.கவினரை கைது செய்தால், என்ன செய்வோம் தெரியுமா? என்று மிரட்டும் பாணியில் பேசினார்.

கருணாநிதியின் பேச்சுகளை அடுத்து தமிழ்நாட்டில் தி.மு.க. வினர் தொடர்ந்து வன்முறை வெறியாட்டத்தில் ஈடுபட்டுள்ளனர்.

கழகத் தோழர்களை தாக்குவது, கழகக்கொடிகளை கிழிப்பது, கொலை முயற்சிகளில் ஈடுபடுவது போன்ற செயல்களில் தி.மு.க. வினர் தீவிரமாக இறங்கியுள்ளனர்.

தஞ்சை மாவட்டத்திலும், சென்னை நகரிலும், திமுகவினர் வேண்டுமென்ற கலகத்தை உருவாக்க திட்டமிட்டு முயன்று வருகிறார்கள்

சென்னை அண்ணாநகர் தொகுதியில் எம் ஜி ஆர் மன்ற செயலாளர் ராஜேந்திரனை தி.மு.க. வினர் கத்தியால் குத்தி கொலை செய்ய முயற்சித்துள்ளனர்.

தி.மு.க.வினர் வன்முறை செயலில் ஈடுபட்ட போதிலும் கழகத்தோழர்கள் அமைதி காத்து வருகிறார்கள்.

தஞ்சை மாவட்டத்தில் திமுகவினரின் வன்முறை தாக்குதல் பற்றிய விவரங்களை நன்னிலம் தொகுதி கழக சட்டமன்ற உறுப்பினர் கலையரசன் தெரிவித்துள்ளார்.

கழக சட்டமன்ற உறுப்பினர் நன்னிலம் கலைஅரசன் ஒரு அறிக்கையில் தெரிவித்திருப்பதாவது :-

திருவாரூர் தாலுக்காவை சார்ந்த சோழகநல்லூர் பகுதியில் வீரமணி, திராவிடர் கழகத்தின் கோட்டையாக இருந்து வந்தது.

### சுயநல அரசியல்

சமீப காலங்களில் வீரமணியின் சுயநல அரசியலை புரிந்து கொண்ட அப்பகுதியில் உள்ள விவசாய தொழிலாளர்களும் விவசாயிகளும் அக்கட்சியை விட்டு விலகி புரட்சித் தலைவரின் தலைமையில் உள்ள கழகத்தில் சேர்ந்தார்கள்.

ஆயிரக்கணக்கான தொண்டர்கள்பல கிராமங்களிலிருந்து புரட்சித் தலைவரின் தலைமையில் இணைந்தது. பொறுக்காத வீரமணி கட்சியினர் கழகத் தோழர்களை ஊரைவிட்டு ஒதுக்கியும் கடைத்தெருவில சாமான்கள் வாங்காமல் கட்டுப்பாடு செய்துவந்துள்ளனர்.

இப்பகுதியில் கழகம் வளரக் கூடாது என்ற எண்ணம் கொண்ட வீரமணி கட்சியினர் திராவிடர் கழக மாநாடு என்ற பெயரில் வழக்கறிஞர்களை முற்றுகையிட செய்து தாழ்த்தப்பட்ட மக்களுக்குள் அடிதடிகளை உருவாக்கி ரத்த வெறியாட்டம் நடத்திக்கொண்டு வருகிறார்கள்.

உரிய முறையில் நடவடிக்கை எடுக்கும் காவலரைய அடித்ததோடும் அல்லாமல் காவல்துறை மீது சரமாரியான வீணான குற்றச்சாட்டுகளை சுமத்தி வருகின்றனர்.

கடந்த 22-4-84ம்தேதி சோழகநல்லூரில கழகக் கொடியை இறக்கி கொடியைக்கொளுத்தி கழகத் தோழர்களை ஓட ஓட அடித்தனர் வீரமணிக் கும்பல்.

அவர்களது வெறியாட்டத்தை தாங்கமுடியாத அப்பாவி மக்கள் பக்கத்திலுள்ள கிராமங்களில் தஞ்சம் புகுந்துள்ளனர்.

### பாதுகாப்பு வேண்டும்

திருவாரூர், நன்னிலம், நாகப்பட்டினம் ஆகிய பகுதிகளில் உள்ள வைப்பூர், சோழகநல்லூர், சூரனூர், பனங்காட்டாங்குடி, கொட்டாரக்குடி, வடவோடை, ஒக்கூர், ஆகிய பகுதிகளில் அன்றாடம் தாக்கப்படும் கழகத்தினருக்கு தக்க பாதுகாப்பு தரவேண்டும். இவ்வாறு கலையரசன் எம்.எல்.ஏ. தெரிவித்துள்ளார்.

இது குறித்து அரசுக்கும் உயர் அதிகாரிகளுக்கும் தெரிவித்துள்ளதாக கலையரசன் தெரிவித்துள்ளார்.

### கத்தியால் குத்திக்கொல்ல தி.மு.க. வினர் முயற்சி

விருகம்பாக்கத்தில் கழகத் தோழர் ஒருவரை திமுகவினர் பட்டாக்கத்தியால் குத்தி கொலை செய்ய முயற்சித்தனர். பயங்கர ஆயுதங்களோடு வந்து தாக்கினர்.

சென்னை விருகம்பாக்கம் பகுதி தசரதபுரத்தை சேர்ந்தவர் ராமச்சந்திரன் நேற்று இரவு ராமச்சந்திரன் தன்னுடைய வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தார்.

அப்போது திமுகவைச் சேர்ந்த சந்தரசேகரன், மூர்த்தி உள்பட 5 பேர் கைகளில் பட்டாக்கத்தி, தடி ஆகியவற்றுடன் திடீரென்று வீட்டில் நுழைநதனர்.

ராமச்சந்திரனை அந்த 5 பேர்களும் பயங்கரமாக தாக்கினாகள்.

ராமச்சந்திரனி தோளபட்டையில் அவர்

(3-ம் பத்தி பாாக்க)

### தண்டையார்பேட்டைபகுதி தீவிபத்து.

## பாதிக்கப்பட்ட மக்களுக்கு மேலும் 2 நாள் உணவு

### தங்க இடமும் ஏற்பாடு

சென்னை, மே. 28 தண்டையார்பேட்டை பகுதியில் நேற்று ஏற்பட்ட தீ விபத்தில் பாதிக்கப்பட்ட மக்களுக்குமேலும் 2 நாட்களுக்கு உணவு அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது

இவர்கள் தங்கி இருக்க இட வசதியும் செய்துதரப்பட்டுள்ளது.

தண்டையார் பேட்டை பகுதியில் நேற்று நடந்த தீ விபத்தில் சுமார் 300 குடிசைகள் நாசமானது தெரிந்ததே, இதில் இருந்த மக்கள் வீடு இழந்துள்ளனர்.

பாதிக்கப்பட்ட அந்தப் பகுதியை மாநகராட்சி ஆணையாளர் சாந்தஷீலா நாயர், தனி அதிகாரி சந்திரசூடன் ஆகியோர் பார்வையிட்டனர்.

விநோபாநகர் நெடுஞ்செழியன் நகர், ராஜசேகரன்நகர் ஆகிய பகுதிகளைப் பார்வையிட்டனர்.

### உணவுப் பொட்டலம்

பாதிக்கப்பட்ட மக்களுக்கு நேற்று 1500 உணவுப் பொட்டலம் வழங்கப்பட்டது.

இன்றும் நாளையும் இவர்களுக்கு உணவுப் பொட்டலம் தொடர்ந்து வழங்க உத்திரவிடப்பட்டுள்ளது.

இவர்கள் தங்கி இருக்க மாநகராட்சி பள்ளிகளில் இடவசதி செய்து தரப்பட்டுள்ளது.

பாதிக்கப்பட்ட மக்களுக்கு பேசின்சாலை உணவுக் கூடத்தில் உணவு தயாரிக்கப்படுகின்றது.

அங்கு தயாரிக்கப்படும் உணவையும் அதிகாரிகள் பார்வையிட்டனர்.

### அரசு உதவும்

பாதிக்கப்பட்ட மக்கள் பல கோரிக்கைகளை அதிகாரிகளிடம் கொடுத்தனர்.

இந்தக்கோரிக்கைகளை மாவட்ட ஆட்சித் தலைவருக்கு அனுப்பி ஆவன செய்வதாகவும் அரசு எல்லா உதவிகளையும் செய்யும் என்றும் இவர்கள் கூறினார்கள்.



டெல்லியில் நடந்த பொது விநியோக ஆலோசனை கவுன்சில் கூட்டத்தில், பங்கேற்ற மத்திய சிவில் சப்ளைத் துறை அமைச்சர் பகவதஜா ஆசாதை தமிழக நிதியமைச்சர் டாக்டர் நாவலர் சந்தித்த போது எடுத்த படம்.

### மின்சாரம் தாக்கி மரணம்

சென்னை, மே. 28- மின்சாரம் தாக்கி ஒரு வாலிபர் இறந்துள்ளார் அவரது பெயர் லோகநாதன் வயது 26.

அசோக் நகரில் ஒருவீட்டில் மின்சார ஒயரில் வேலை செய்த போது ஷாக் அடித்து கீழே விழுந்து உயிரிழந்தார்.

*

### தண்ணீர் லாரி மோதி பெண் மரணம்

சென்னை, மே 28— தண்ணீர் லாரி மோதி ஒரு பெண்மணி மரணம் அடைந்தார்

அந்தப் பெண்க்குவயது35 இருக்கும் வேளச்சேரி ரோடில் நடந்து சென்று கொண்டு இருந்த போது தண்ணீர் லாரி மோதி படுகாயமுற்று விழுந்து கிடந்தார்.

மயக்கமுற்றுக்கிடந்த அந்தப் பெண்ணை தீ பணைக்கும் படையினர் மருத்துவமனைக்கு எடுத்து வந்தனர் வழியிலேயே மரணம் அடைந்துவிட்டார். அவர் யார் என்று விவரம் தெரியவில்லை.

### அமைச்சர் பண்ருட்டியார் முன்னிலையில்

## தி. மு. க. - ஜனதா கட்சியினர் 225 பேர் கழகத்தில் இணைந்தனர்

பரங்கிப்பேட்டை. மே. 28-தென் ஆற்காடு மாவட்டம் பரங்கிப்பேட்டை ஒன்றியத்தில் தி. மு. கவினர் ஜனதாகட்சியினர் அந்தந்த கட்சிகளில் இருந்து விலகி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் முன்னிலையில் கழகத்தில் இணைந்துள்ளனர்.

தென்னாற்காடு மாவட்டம் பரங்கிப்பேட்டை ஒன்றியம் வயலாமூர் கிராமத்தில் எஸ். கோதண்டபாணி பிள்ளை (ஜனதா) ஆர். கலியபெருமாள் (தி.மு.க) டி பரமசிவம், என் பஞ்சாட்சரம் உட்பட 225 பேர் திக - திமுக ஜனதா கட்சிகளிலிருந்து விலகி அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன முன்னிலையில கழகத்தில இணைந்தனர்.

புவனகிரி ஒன்றிய செயலாளர் ராதாகிருஷ்ணன் அப்போது உடனிருந்தார்.

அப்போது முதலமைச்சர் குழந்தைகள் சத்துணவு நிதிக்காக ரூ. 1001 அமைச்சரிடம் வழங்கப் பட்டது.

*

### நேரு விருது

புதுடெல்லி, மே 28— 1982 83-ம் ஆண்டிற்கான ஜவகர்லால் நேரு விருது முறையே செனகல்நாட்டு முன்னாள் ஜனாதிபதி டாக்டர் லியோபோல்டு செடார் செங்கார். ஆஸ்திரிய நாட்டு முன்னாள் பிரதமர் டாக்டர் புருனோ கிரீஸ்கி ஆகியோருக்கு கிடைத்துள்ளது

இதற்கான அறிவிப்பை அமைப்பின் தலைவரான ஆ. தயதுல்லா வெளியிட்டார்.

(8-ம் பத்தி தொடர்ச்சி)

கள் பட்டாக்கத்தியால் வெட்டினார்கள்.

ராமச்சந்திரன் போட்ட கூச்சலைக் கேட்டு பக்கத்தில உள்ளவர்கள் ஓடி வந்தார்கள். உடனே தி. மு க.வினர் 5 பேரும் ஓடிவிட்டனர்.

ராமச்சந்திரன் படுகாயத்துடன் பொதுமருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டுளளார்.

இது பற்றிய புகாரைத் தொடர்ந்து விருகம்பாக்கம் போலீசார் சந்திரசேகரனையும் மூர்த்தியையும் கைது செய்தனர். மற்ற 3 போ் தலைமறைவாகி விட்டனர்.

போலீசார் தீவிர புலன் விசாரணை செய்து தலைமறைவாகயுள்ள 3 பேர்களையும் தேடி வருகிறார்கள்.

# சென்னை: சைக்கிள் ரேஸ்

சென்னை, மே 28— சென்னையில் ஜுன் 8ந்தேதி முதல் 10ம்தேதி வரை சைக்கிள் ரேஸ் நடைபெறுகிறது.

இப் போட்டியைத் தமிழ்நாடு சைக்கிள் சங்கம் நடத்துகிறது.

ஆண்களுக்காக 25, 50, மற்றும் 100கிலோமீட்டர் பந்தயமும், பெண்களுக்காக 25 கிலோ மீட்டர் பந்தயமும் நடைபெறுகிறது.

# மத்திய பிரதேசத்தில் அனல் காற்று 2 பேர் சாவு

குவாலியர், மே 28— மத்தியபிரதேசம் பூராவும் கடந்த ஒரு மாதமாகவே வெய்யில் கொளுத்தி வருகிறது.

மாநிலம் பூராவும் அனல் காற்று வீசுகிறது.

கடந்த வாரம் குவாலியர் நகரத்தில் வெய்யில் கொடுமையால் 2 பேர் செத்தார்கள்.

கொள்ளைகளைத் தவிர்க்க புறநகர் மக்கள்

# சாமியார் போன்று வேடமிட்டுவருவோரிடம் எச்சரிக்கை வேண்டும்

## போலீஸ் அதிகாரி வேண்டுகோள்

**சென்னை. மே. 28 சாமியார் வேடத்தில் திரிபவர்களிடம் புறநகரில் வாழும மக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று செங்கல்பட்டு (கிழக்கு) மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு ஜி எஸ் ரமணன் கேட்டுக் கொண்டார்.**

ஆவடிப் பகுதியில்கடந்த சில மாதங்களாக நடந்து வரும் கொள்ளைகளைத் தடுக்க ஆங்காங்கே கண்காணிப்புகுழுக்கள் அமைக்கப்பட்டு வருகின்றன.

இம்மாதிரியான 20கண்காணிப்பு குழுக்கள் ஆவடி நகரியத்தில அமைக்கப்பட்டுள்ளன. இக்கமிட்டிகளில் 700பேர் இடம் பெற்றுள்ளனர்.

இவ்வாறு கண்காணிப்புக் குழுக்கள் அமைக்கப்பட்டதையொட்டி ஒரு விழாவுக்குஏற்பாடுசெய்யப்பட்டது. இந்த விழாவில் செங்கல்பட்டு (கிழக்கு) மாவட்ட போலீஸ் சூப்பிரண்டு ஜி. எஸ். ரமணன் கலந்து கொண்டு பேசினார். அப்போது அவர் கூறியதாவது:-

புறநகர் பகுதிகளில் திரியும் சாமியார்கள் குறித்து அப்பகுதிகளில் வாழும் மக்கள எச்சரிக்கையாக இருக்கவேண்டும ஏனெனில இவர்கள் கொள்ளைக்காரர்களின் உளவாளிகளாக இருக்கக் கூடும்.

கொள்ளை அடிப்பதற்காக கொள்ளையர் மேற்கொள்ளும் வழிகளில் சாமியார்கள் மூலம் உளவு பெறுவதும் ஒன்றாக இருந்திருக்கிறது என்பதற்கு அத்தாட்சி உண்டு

இவ்வாறு ஜி. எஸ், ரமணன் கூறினார்.

இந்த விழாவுக்கு வட்டார ஊர்க்காவல் படை கமாண்டர் ஜி. சினிவாசன் தலைமை வகித்தார்.

# ஜனாதிபதி ஜைல்சிங் திறந்த நவீன மருத்துவ மனை

கவுகாத்தி. மே. 28— அசாம் மாநிலத்தில்உள்ள கவுகாத்தி மருத்துவக் கல்லூரி வளாகத்தில் முன்னாள் பஞ்சாப கவர்னர் மகேந்திரமோகன் சௌத்திரி ஞாபகார்த்தமாக 200 படுக்கை வசதி கொண்ட நவீன ஆஸ்பத்திரி ஒன்று கட்டப்பட்டுள்ளது. இதனை இன்று பிற்பகல் ஜனாதிபதி ஜைல்சிங் திறந்து வைத்தார்.

நாளை காலை கித மந்திருக்கு செல்கிறார்.

பின்னர் துப்ரிக்கு சென்றுகுருத்துவராவிற்கு செல்கிறார்.

பிறகு அங்கிருந்து கவுகாத்திக்கு திரும்பி மறு நாள் 30-ந்தேதி திரும்புகிறார்.

# உ. பி., பூடான் லாட்டரி முடிவுகள்

புதுடெல்லி மே 28- உ. பி. ராபிள லாட்டரியின் 115வது குலுக்கல் நேற்று நடநதது முடிவுகள வருமாறு-

முதல் பரிசு
(ரூ 1 லட்சம்)
ஆர். சி 124482
(ஆதே எண்களை உடைய மற்ற வரிசைசீட்டுகளுக்கு ஆறுதல்பரிசு தலா ரூ1000 உண்டு)

2 வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
ஆர். ஏ 423972
ஆர். பி. 281508
(கீழ்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசுஉண்டு)

3 வது பரிசு
(தலா ரூ. 500)
64200 54209 04419
45681 88051 75881
35732 64291 65452
48492

4 வது பரிசு
தலா ரூ. 50
6649 2443 6121
6603 4579 4360
4363 2832 5401
4887

5-வது பரிசு
தலா ரூ. 20
1007 4119 6455 1355
5651 9046 7271 9062
6933 4567

6-வது பரிசு
தலா ரூ 10
063 523 135 648
268 780 316 820
494 931

7-வது பரிசு
தலா ரூ.5
009 584 167 691
245 790 327 868
464 999 034 508
125 673 210 795
399 813 400 980
037 598 122 643
258 711 345 857
490 958 084 583
170 604 274 706
303 840 437 991

## பூடான் லாட்டரி முடிவு

புதுடெல்லி, மே 28— பூடான் லாட்டரியின் 251 வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:

முதல்பரிசு
(தலா ரூ 1லட்சம்)
இ 139470 ஜி 603965
எச் 162917 ஜி 384623

ஆறுதல் பரிசு
(தலா ரூ. 1000)
இ 603965 162917
384623 ஜி 139470
162917 384623
எச் 139470 603965
384623
ஐ 139470 603965
162917

2- வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
இ 420049 ஜி 507223
எச் 250661 ஐ 538269
கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3- வது பரிசு
12240 43361 25164
56571 29359 59304
29656 86149 33456
87410

4-வது பரிசு
(தலா ரூ. 50)
8401 6639 4188 7400
4740 7459 6348 7607
6583 9831

5-வது பரிசு
தலா ரூ. 20
0494 2790 1040 3199
1930 3613 2168 4247
2160 1617 4989 7713
5393 8527 6013 8921
6400 8543 7263 8315

6-வது பரிசு
தலா ரூ. 10
032 545 185 677 268
780 313 891 433 996

(இதே எண்கள் உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு)

2-வது பரிசு
தலா ரூ. 10. ஆயிரம்
ஜேஏ 155403
ஜேபி 396107
ஜேசி 166410
ஜேடி 328164
ஜேஇ 258886
கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு)

3-வது பரிசு
தலா ரூ. 500
03135 14230 17150
45026 12196 76917
57361 52303 52295
90953

4-வது பரிசு
தலா ரூ. 100
4339 6869 0340 4183
6120 0150 5253 3295
5087 6148

5-வது பரிசு
(தலா ரூ 50)
2050 9364 9239 2330
6127 7538 8330 5758
4261 4506

6-வது பரிசு
(தலா ரூ 20)
9582 0990 7209 5320
1051 4794 7390 5493
6558 8393

7-வது பரிசு
தலா ரூ. 10
039 200 231 311
445 565 600 761
820 972

8-வது பரிசு
தலா ரூ. 5
040 188 291 305
485 581 640 740
854 959

## உ.பி. ஜனதா லாட்டரி முடிவு

லட்சுமணபுரி, மே. 28- உ. பி. ஜனதா லாட்டரியின் 272வது குலுக்கல் முடிவுகள் வருமாறு:

முதல் பரிசு
ரூ. 1 லட்சத்து 51 ஆயிரம்
ஜெ பி 449998

சென்னை அண்ணாநகரில்

# மன்ற செயலாளருக்கு கத்திக் குத்து: திமுக.வினர் வன்முறை

**சென்னை, மே 28 சென்னை அண்ணா நகர் தொகுதியைச் சேர்ந்த எம். ஜி ஆர் மன்றச் செயலாளர் வி. ராஜேந்திரனை தி. மு. க. வினர் கத்தியால் குத்திபடுகாயப் படுத்தியுள்ளனர்.**

தமிழ்நாடெங்கும் தி மு. க.வினர் கழக தோழர்களைத் தாக்கும் வன்முறை செயலில் இறங்கிவிருப்பது தெரிந்ததே

சென்னை அண்ணா நகர்தொகுதியில், 77-வது வட்டம் எம். எம். டி. ஏ காலனியில், உள்ள எம். ஜி ஆர் மன்ற செயலாளா வி. ராஜேந்திரன். இவர் நடந்து முடிந்த இடைத்தேர்தலில் கழகத்திற்காக பிரச்சாரப் பணியில் ஈடுபட்டிருந்தார். அப்போதே தி மு க வினர் இவரைத்தாக்கி கொலை முயற்சி முயற்சித்துள்ளனர்.

நேற்றிரவு 8 மணி சுமாருக்கு. தனியாக இருநத ராஜேந்திரனை தி.மு.க.வைச் சேர்ந்த ராமசாமி (77-வது வட்ட தி.மு.க செயலாளர்) ஸ்ரீதர், வைரவன் சுந்தர், ராமலிங்கம், அண்ணாமலை, பெருமாள், பழனி உஸ்மான், சங்கரன், சின்ன ராஜ், ஜீவா ஆகியோர் கத்தியால் குத்தி தாக்கியதாக கூறப்படுகிறது. இதனால் ராஜேந்திரன் படுகாயமடைந்தார்வலது கையில் 2 விரலகள் துண்டிக்கப்பட்டுள்ளன.

இதையடுத்து ராஜேந்திரன் உயிருக்கு ஆபத்தான நிலையில்ஸ்டான்லி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

இத்தகவல்களை 77வது வட்ட கழக செயலாளர் ஏ. இ. வெங்கடேசன் தெரிவித்துள்ளார்.

அதெலடிக்:

# ரயில்வே மகளிர் அணி முதலிடம்

பம்பாய், மே. 28— 23-வது அகில இந்திய அதெலடிக் போட்டிகள் பம்பாயில் நடைபெற்றன.

இதில் மகளிர் பிரிவில் இந்திய ரயில்வே மகளிர் அணி முதலிடத்தைப் பெற்றது. 8 தங்கப்பதக்கங்கள், 3 வெள்ளிப் பதக்கங்கள், 6 வெண்கலப் பதக்கங்களை இந்த அணியினர் பெற்றனர்.

ஆண்கள் பிரிவில் முப்படை அணிமுதலிடத்தை பெற்றது.

இந்த ஆண்டின் சிறந்த விளையாட்டுவீராங்கனையாக பி. டி. உஷா தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார்.

மராத்தான் நடைப் போட்டியில்வென்றசாந்ராம் சிறந்த ஆண் அதெலடிக் வீரராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# இலங்கைத் தமிழர் கோரிக்கைகள் நியாயமானதே

## கடத்தப்பட்ட அமெரிக்க தம்பதிகள் பகிரங்க அறிவிப்பு

**நியூயார்க், மே 28- இலங்கையில் விடுதலைப்புலிகளால் கடத்தப்பட்டு பின்னர் விடுவிக்கப்பட்ட அமெரிக்கத் தம்பதிகள் இலங்கைத்தமிழர் கோரிக்கை நியாயமானதே என்று தெரிவித்திருக்கிறார்கள். இலங்கைத்தமிழர்களின் கோரிக்கைகளை நிறைவேற்ற இலங்கை அரசு முயற்சிக்கவில்லை என்றும் ஆலன் தம்பதிகள் கூறியிருக்கிறார்கள்.**

யாழ்ப்பாணத்தில் ஒரு தனியார் நிறுவனத்தில் வேலை பார்த்து வந்த அமெரிக்க தம்பதிகள் ஸ்டான்லி ஆலன் அவரது மனைவி மேரி ஆலன் ஆகியோர்விடுதலைப்புலிகளால் கடத்தப்பட்டதும் பின்னர் பிரதமர் இந்திராகாந்தி, முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோர்களின் வேண்டுகோளுக்கு இணங்க விடுவிக்கப்பட்டதும் தெரிந்தே.

இம் மாதம் 10-ம் தேதி இரவு ஆலன் தம்பதிகள் கடத்தப்பட்டார்கள். பின்னர் 5 நாட்கள் அவர்கள் ரகசியமாக வைக்கப்பட்டிருந்தனர். பின்னர் விடுதலை செய்யப்பட்டனர்.

விடுதலை செய்யப்பட்ட அமெரிக்க தம்பதிகள் இப்போது நியூயார்க்கில்இருக்கிறார்கள.

நியூயார்க் நகரில்இருந்து ஆலன் தம்பதிகள இலங்கைதமிழர்விடுதலை இயக்கமுன்னணியினருக்கு ஒரு கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

### எங்களுக்கு ஆபத்தில்லை

'உலகமக்களுக்கு என்ற தலைப்பிட்டு எழுதப்பட்டுள்ள அந்தக்கடிதத்தில் அவர்கள் குறிப்பிட்டுள்ளதாவது:

நாங்கள் அமெரிக்காவில் இருந்து சி. ஐ. ஏ. (அமெரிக்கா உளவு ஸ்தாபனம்) ஏஜெண்டுகளாக இலங்கைக்கு வந்திருக்கிறோமோ என்ற சநதேகத்தின்பேரில் கடத்தப்பட்டோம்.

எங்களை கடத்திய விடுதலை இயக்கத்தினர் எங்களுக்கு எந்தவிதமான ஆபத்தையும் ஏற்படுத்தவில்லை.

எங்களுடைய உடமைகளையோ, பணத்தையோ- எதையும்அவர்கள் எடுக்கவில்லை.

பாதுகாப்பான ஒருஇடத்தில் எங்களை வைத்திருந்தார்கள், என்னிடமும், என் மனைவியிடமும் அவர்கள் துருவித்துருவி பல கேள்விகளைக்கேட்டனர்.

"உங்கள் உயிருக்கு, எந்த ஆபத்தும் வராது தீங்கு எதுவும் செய்ய மாட்டோம்" என்றும் அவர்கள் உத்தரவாதம் அளித்தார்கள். இருந்த இடத்தில் நாங்கள் சொகுசாக இருக்க அவர்களால்முடிந்த வரைவசதிகளை செய்து கொடுததனர்.

### நியாயமான கோரிக்கை

"இலங்கை தமிழர்களின் கோரிக்கைகள் மிகவும் நியாயமானதே வேலை வாய்ப்பு, கல்வி, அரசு கொள்கைகளில் பங்கேற்பு இப்படி பல கோரிக்கைகளை அந்த இயக்கத்தினர் முன் வைத்துக் குரல் எழுப்பி வந்தாலும் அதில் முக்கியமானது மனித உரிமைகள் பற்றியது.

இந்த விஷயத்தில் அவர்களது கோரிக்கைகளை அங்கீகரிக்க இலங்கை அரசு முயற்சிகள் எதையும் மேற்கொள்ள வில்லை. சர்வகட்சி மாநாடு, வட்ட மேஜை மாநாட்டில் இந்த பிரச்னைகள் பற்றி பேசுவது போல் நடந்துகொள்கிறதே தவிர இலஙகை அரசு உருப்படியான காரியம் எதையும் செய்யவில்லை

இலங்கைத் தமிழர் பிரச்னைகள அவர்களது கோரிக்கைகள் தீர்ந்த பாடில்லை.

மனிதாபிமான அடிப்படையில் நாங்கள் இருவரும் விடுதலை செய்யப்பட்டு இருக்கிறோம். இலங்கை அரசிடம் இருந்துவந்தநெருடிபிடியோ அல்லது அச்சுறுத்தலோ எங்கள் விடுதலைக்குக் காரணம் அல்ல.

முழு சுதந்திரத்துடன் சுயேச்சையாக எங்கள் மனதுக்குப்பட்டதை இந்தக் கடிதத்தில் நாங்கள் எழுதியுள்ளோம்.

இதில்யாருடைய தலையீடும் இல்லை. விடுதலைப் புலிகளுக்கு எங்களுடைய ஆதரவு உண்டு.

இவ்வாறு ஆலன் தம்பதிகள் அந்தக் கடிதத்தில் எழுதியுள்ளனர்.

அமிர்தசரஸில்

# கடைக்காரர் வெட்டிக் கொலை

அமிர்தசரஸ், மே. 28— அமிர்தசரஸ் பகுதியைச் சேர்ந்த பாசர்க் கிராமத்தைச் சேர்ந்த தல்ஜித் குமார் என்ற கடைக்காரர் வெட்டிக் கொல்லப்பட்டார்.

தல்ஜித்குமார் கமிஷன் ஏஜெண்டாகவும் பணியாற்றி வந்தார்.

இன்று காலை அவரது கடைக்கு வந்த 7 பேர் தல்ஜித்தை கத்தியால் வெட்டினார்கள்.

மருத்துவமனைக்குஎடுத்துச் செல்லும் வழியில் தல்ஜித்குமார் பரிதாபமாக இறந்தார்.

காஞ்சியில்

விளையாட்டு

# பயிற்சி முகாம்

காஞ்சிபுரம், மே 28— காஞ்சிபுரம் மாவட்ட விளையாட்டு அரங்கில் கோடைகாலவிளையாட்டு பயிற்சிமுகாமை மாவட்ட போலீஸ் அதிகாரி பால சுப்பிரமணியம் துவக்கி வைத்தார்.

மாவட்ட கலெக்டர் சினிவாசன் நிகழ்ச்சிக்கு தலைமை வகித்தார்.

120 மாணவர்கள், 26 மாணவிகள் இந்த முகாமில் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

## நியமனம்

காஞ்சிபுரம், மே 28— காஞ்சிபுரம் ஊராட்சிஒன்றிய காய்கறி உற்பத்தியாளர்கள் கூட்டுறவு விற்பனை சங்கத்தலைவராக வெங்கடாவரம் கிருஷ்ணன் நியமிக்கப்பட்டுள்ளார்.

# விண்வெளிக்கலம்: ரஷ்யா - இந்தியா இடையே ஒப்பந்தம்

**புதுடெல்லி. மே 28. இந்தியாவுக்கும் சோவியத் ரஷ்யாவுக்கும் இடையே விண்வெளிக் கோள் குறித்து ஒப்பந்தம் கையெழுத்தாகி இருக்கிறது. ஒப்பந்தம் நேற்று டெல்லியில கையெழுத்தாகியது**

இந்தியா விண்வெளியில் இன்சாட் செயற்கைக் கோளை ஏவியுள்ளது.

இந்த இன்சாட் செயற்கைக் கோளுக்கும் ரஷ்யா ஏவியுள்ள செயற்கைக் கோளகளுக்கும் இடையே தகவல் தொடர்பு ஒத்துழைப்பு ஏற்படுத்தஇந்த ஒப்பந்தம் வகைசெய்கிறது. ஸ்டேஷனர் - 13, 14 ஸ்டேஷனர் டி - 2 போடோக - 2, வோல்னா8 ஆகிய ரஷ்ய செயற்கைக் கோளகள் திருப்தியாக ஒத்துழைக்க அவற்றில் பொருத்தமாக மாற்றங்கள செய்ய இரு தரப்பிலும் ஒப்புக்கொளளப பட்டது.

வண்வெளி சுற்றுப் பாதையில் இந்த செயற்கைக் கோள்களுக்கான நிலைகள் இன்சாட் 1-பி. மற்றும் இன்சாட் 1-சி நிலைகளுடன் ஒருங்கிணைந்து செயல்படும.

ஒன்றுக்கொன்று குறுக்கீடுகள் ஏற்படாதவாறு பார்த்துக் கொள்ள இந்த மாற்றங்கள் அவசியமாகிறது.

நேற்றுகையெழுத்தான ஒப்பந்தத்தில ரஷ்ய வெளியுறவுத்துறை தலைமை அதிகாரி டாக்டர் பி ஐ. சிர்கோமிர், மத்திய அரசின் வயர்லஸ் துறை ஆலோசகர் டி வி. ஸ்ரீரங்கனும் கையெழுத்திட்டனர்.

ஒலிம்பிக்

விளையாட்டு போட்டி

# புதிய இந்திய ஆக்கிகுழு அறிவிப்பு

புதுடெல்லி, மே 28— அமெரிக்காவில் லாஸ்ஏஞ்செலஸ் நகரில் நடைபெற இருக்கும்.

ஒலிம்பிக்விளையாட்டுப் போட்டியில் கலந்து கொளவதற்காக புதிய இந்தியஆக்கிகுழு அறிவிக்கபபட்டுள்ளது.

புதிதாக தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள 16பேர் கொண்ட குழுவுக்கு ஜாபர் இக்பால் காப்டனாக இருப்பார்.

இத்தகவலை இந்திய ஆக்கி விளையாட்டு சம்மேளன தலைவர் ராஜா பலேந்திரசிங் வெளியிட்டார்.

திருவாரூர் நெல் பதப்படுத்தும்

ஆய்வு நிலையத்தில் கண்டுபிடிப்பு:

# குறைந்த விலை நவீன நெல் அரைவை ஆலை

**திருவாரூர் மே. 28- திருவாரூர் நெல் பதப்படுத்தும் ஆய்வு நிலையத்தில், குறைந்த செலவில் நவீன நெல அரைவை எந்திரம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.**

தஞ்சை மாவட்டம் திருவாரூரில் நவீன அரிசி ஆலை உள்ளது. இதோடு, நெல் பதப்படுத்தும் ஆய்வுநிலையம் உளளது.

இந்த ஆய்வு நிலையத்தைச் சேர்நதபேராசிரியர்கள் ஜி. கணேசன், பி. எஸ். வாசன ஆகியோர் நவீன நெல் அரைவை ஆலை ஒனறை வடிவமைத்துள்ளனர்

குறைந்த செலவு கொண்ட இந்தஎந்திரத்தை எளிதில் தயாரித்துக் கொள்ளலாம். அதோடு இதனை ஆங்காங்கே உள்ள சிறு பட்டறைகளில் கூட ரிப்பேர் செய்து கொள்ளலாம்.

15 குதிரை சக்தி கொண்ட மோட்டார் மூலம் இயங்கும் இந்த எந்திரத்தின் அடக்க விலை ரூ 9ஆயிரம் ஆகும். மோட்டார் மற்றும் பாகங்களின் விலை 15 ஆயிரம் ஆகும். இந்த எந்திரத்தினை இயக்க ஒருவரே போதும்.

சிறு இடத்திலும் இந்த எந்திரத்தைஅமைக்கலாம் ஒரு மணி நேரத்தில் 25. குவிண்டால்முதல்3குவிண்டால் நெல் வரை இந்த நவீன எந்திரத்தில்அரைக்கலாம்.

குறைந்த பட்சம் 5 கிலோ நெல்லை இதில் அரிசியாக அரைக்கலாம்.

கிராமப் பகுதிகளில் இந்த எந்திரங்கலள கலபமாக அமைக்கலாம் என்று கூறப்படுகிறது.

# தோல்விபெற்ற தி.மு.க. மலர்கிரீடம் அணிவதா?

**பல நாள் பட்டினி கிடந்தான் ஒருவன். அவனுக்கு ஒரு புளியம்பழம் கிடைத்தால் எவ்வளவு மகிழ்ச்சி அடைவான்! அத்தகைய மகிழ்ச்சியில் இன்றைக்கு தி.மு.கழகக் கூட்டணியினர் திளைத்துப்போய் இருக்கிறார்கள்.**

இந்தியா முழுமையும் 24 சட்டமன்றத் தொகுதிகளில் இடைத்தேர்தல் நடந்தது.

தமிழகத்தில் நான்கு சட்டமன்றத் தொகுதிகளில் இடைத்தேர்தல் நடந்தது. உப்பிலியாபுரம் தொகுதி - கடந்த சட்டமன்றத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் வெற்றி பெற்ற தொகுதி.

**தஞ்சைத் தொகுதி ஏற்கனவே தி. மு. க வெற்றி பெற்ற தொகுதி.**

மயிலாடுதுறை தொகுதி ஏற்கனவே தி. மு. கழகம் வெற்றி பெற்ற தொகுதி.

அண்ணாநகர் தொகுதி ஏற்கனவே தி மு. கழகம் வெற்றி பெற்ற தொகுதி.

இதில் உப்பிலியாபுரம் தொகுதியில் மீண்டும் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறது.

கடந்த சட்டமன்றத் தேர்தலில் 2 ஆயிரத்து 266 ஓட்டு வித்தியாசத்தில் வெற்றிபெற்ற அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் இந்த இடைத் தேர்தலில் 16 ஆயிரத்து 721 வாக்கு வித்தியாசத்தில் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறது.

**தமது கோட்டை என்று இத்தனை ஆண்டுகளாகத் தி மு. கழகம் சொந்தம் கொண்டாடிய தஞ்சைத் தொகுதியை இம்முறை அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகக் கூட்டணி வென்றிருக்கிறது. இந்திரா காங்கிரஸ் கட்சி தி. மு. கழகக் கோட்டையில் வெற்றிக் கொடியை ஏற்றியிருக்கிறது.**

**இத்தனை ஆண்டுகளாக தம்மிடம் இருந்த தொகுதியை தி.மு.கழகம் வெற்றிகரமாக இழந்திருக்கிறது.**

மாயிலடுதுறை, அண்ணாநகர் தொகுதிகள் ஏற்கனவே தி. மு. கழகம் வெற்றி பெற்ற தொகுதிகள். இப்போது மீண்டும் தி. மு க. கூட்டணி வெற்றி பெற்றிருக்கிறது.

கள்ள ஓட்டு போடத் தெரியாத காரணத்தால் அண்ணாநகர் தொகுதியில் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தோல்வியைத் தழுவியிருக்கிறது. ஒப்புக்கொள்கிறோம். மறுக்கவில்லை.

ஆக, தமிழகத்தில் நடந்த இடைத்தேர்தலில் ஏற்கனவே வெற்றி பெற்ற தொகுதியை உப்பிலியாபுரம் தொகுதியை மீண்டும் அனைத்திந்திய அண்ணா தி. மு கழகம் கைப்பற்றியிருக்கிறது.

**கடந்த சட்டமன்றத் தேர்தல் வரை வெற்றி பெற்ற தஞ்சைத் தொகுதியை தி. மு. கழகம இழந்திருக்கிறது.**

இதில் வெற்றி யாருக்கு என்பது பாமர மக்களுக்கும் புரியும். ஆனாலும் ஏற்கனவே வெற்றி பெற்ற தொகுதிகளை தி. மு. கழகம் மீண்டும் தக்கவைத்துக் கொண்டதற்கு எத்தனை ஆர்ப்பாட்டங்கள்!

தி மு க. தலைமை நிலையச் செலவிலேயே வாணவேடிக்கைகள்! வர்ணஜாலங்கள்!

**அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஏதோ பெரிய இழப்பைச் சந்தித்திருப்பது போல ஒரு தோற்றத்தை உருவாக்க தி.மு.க. கூட்டணி பெரும் முயற்சி செய்கிறது.**

தமிழகத்தில் நான்கு தொகுதிகளில் இடைத்தேர்தல் நடந்த போதே ஜனதா ஆளும் கர்நாடகத்தில் இடைத்தேர்தல் நடந்தது

**மாத்தூர் தொகுதியில் ஜனதா தோல்வி கண்டது. இந்திரா காங்கிரஸ் வெற்றி கண்டது. கர்நாடகத்தில் ஜனதா அரசின் சரித்திரம் முடிந்துவிட்டதுஎன்று கூறலாமா? இதனை தி. மு.க. கூட்டணி ஏற்கத் தயாரா?**

ஏற்கனவே மேற்கு வங்க இடைத் தேர்தல்களில் இந்திரா காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றிருக்கிறது.

தமிழகத்தில் இடைத்தேர்தல் நடந்த போது மேற்கு வங்கம் பெல்காச்சியா தொகுதியில் இடைத்தேர்தல். இந்திரா காங்கிரஸ் வென்றது; மார்க்சிஸ்ட் கட்சி தோல்வி கண்டது. அதற்காக மேற்கு வங்கத்தில் மார்க்சிஸ்ட் அரசின் மகத்துவம் மங்கி விட்டது என்று கூறலாமா? அதனை தி. மு. க. கூட்டணியினர் ஏற்றுக் கொள்கிறார்களா?

தமிழகத்தில் நான்கு தொகுதிகளில் இடைத்தேர்தல். அதே நாளில் கேரளத்தில் மூன்று தொகுதிகளில் இடைத்தேர்தல் மூன்று தொகுதிகளிலும் இந்திரா காங்கிரஸ் கூட்டணி வென்றது. இரண்டு தொகுதிகளில் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி தோற்றது. அதற்காக கேரளத்தில் கம்யூனிஸ்ட் கூட்டணியின் கதை முடிந்து விட்டது என்று கூறலாமா? அதனை தி. மு. க. கூட்டணியினர் ஏற்கத்தயாரா?

**அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் ஏற்கனவே இருந்த உப்பிலியாபுரத்தை இழக்கவில்லை. மீண்டும் வெற்றி பெற்றிருக்கிறது.**

**தி. மு. கழகம் 1967ம் ஆண்டு முதல் தம்மிடமிருந்த தஞ்சைத் தொகுதியை இழந்திருக்கிறது.**

**வெற்றி பெற்றவர்கள் அடக்கமாக இருக்கிறார்கள்.**

**ஆனால் தோல்வி கண்டவர்கள் மலர்கிரீடம் சூட்டி மகிழ்கிறார்கள்.**

**இதுதான் தி.மு.க. அரசியல்!**

---

## திருமணம்

திருவண்ணாமலை, மே. 28- வடஆற்காடு மாவட்டம்கீழ் பென்னாத்தூர் ஒன்றிய செயலாளர் கே. பி. கண்ணனுக்கும் திருவண்ணாமலை டி.எஸ். பொன்னுசாமி கவுண்டர் மகள் சாந்திக்கும் வரும் ஜூன் 4ம் தேதி காலை 9 மணிக்கு மேல் கீழ் பென்னாத்தூர் வாசன் திரையரங்கில் கழகப் பொதுச்செயலாளர் ப. உ. ச. முன்னிலையிலும் அமைச்சர் டாக்டர் நாவலர் தலைமையிலும் திருமணம் நடைபெறவிருக்கிறது.

கோ, விசுவநாதன் எம். எல். ஏ. வரவேற்றுப் பேசுவார். அமைச்சர் விஜயசாரதி, குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் ஏ. எம். ரகுநாதன், சட்டசபை உறுப்பினர்கள் ஏ. சி. சண்முகம், டி. அன்பழகன், ஏ. எம். சேதுராமன், சி. கோபால், என். குலசேகரபாண்டியன் பி.எம். வெங்கடேசன் கி. குப்புசாமி டி. சாமிக்கண்ணு காவனூர் பச்சையப்பன் இரா. ச. மாறன், வேலு. கே.ஜெயராமன் மற்றும் கழக தோழர்கள் வாழ்த்துரை வழங்குவார்கள்.

---

**7-ம் பத்தி தொடர்ச்சி**

படுத்தமுடியும்.

இதன் மூலம் விவசாயிகளுக்கு அதிக லாபம் கிடைக்க வழி ஏற்படும்

ஒரு ஹெக்டேருக்கு (2.5 ஏக்கர்) 5 டன் நெல் விளைவிக்கப்பட வேண்டும் என்று தமிழக அரசு குறியளவு நிர்ணயித்துள்ளது.

இந்த ஆண்டு இந்த குறியளவை அடைய தண்ணீரை கட்டுப்பாடுசெய்து விநியோகம் செய்ய வேண்டும்

இவ்வாறு ஆர் கே. சிவணப்பன் கூறினார்,

---

சென்னை நகரில்

# நடமாடும் வேன்களில் சமைத்த கோழி இறைச்சி விற்பனை

## கல்யாணிராமசாமி தகவல்

**சென்னை, மே 28. சென்னை நகரில் நடமாடும் வேன்களில் சமைத்த கோழி இறைச்சி விற்பனை செய்யப்பட இருப்பதாக கோழி வளர்ப்பு வாரியத்தலைவர் கல்யாணி ராமசாமி தெரிவித்தார்.**

தமிழ்நாடு கோழி வளர்ப்புவாரியத்தலைவர் கல்யாணிராமசாமி நிருபர்களிடம் கூறியதாவது:-

தமிழ்நாட்டின் பலபகுதிகளிலும் கோழி வளர்ப்பு வாரியத்தின் சார்பில் பல் வேறு கடைகள் (டாப்கோ ராங்க்) நடத்தப்பட்டு வருகின்றன.

அவைகளில் நன்றாக சமைத்த கோழிக்கறி, சூப்பு, ஆம்லெட், அவித்த முட்டை ஆகியவை விற்பனை செய்யப்படுகின்றன.

பட்டதாரிகளும் முன்னாள் ராணுவத்தினரும் ஆதரவற்ற விதவைகளும் உடல்ஊனமுற்றவர்களும் இந்த கடைகளை நடத்தி வருகிறார்கள்.

அவர்களுக்கு மாதம் 500ரூபாயிலிருந்து 3 ஆயிரம் ரூபாய் வரை வருமானம் கிடைக்கிறது

பிரதமரின் 20 அம்சத் திட்டத்தின் கீழ் ஒருங்கிணைந்த கிராமப்புற வளர்ச்சித் திட்டத்தின்படி இறைச்சிக் கோழி (பிராயிலர் சிக்கன்) வளர்ப்பு முறை கிராமப்புறங்களில் பரப்பப்படுகிறது.

### 123 இடங்களில் திட்டம் அமல்

பொருளாதாரத்தில்பின் தங்கிய நிலையில் உள்ளவர்களின் வளர்ச்சிக்காக இந்த திட்டம் வகுக்கப்பட்டது.

செங்கல்பட்டு மாவட்டத்திலும் வடஆற்காடு மாவட்டத்தில் வேலூர் பகுதிகளிலும் 123 இடங்களில் இந்த திட்டம் அமல் நடத்தப்படுகிறது.

தமிழ்நாட்டில் உள்ள ஆதிதிராவிடர் வகுப்பைச் சேர்ந்த ஏழை விவசாயிகள் இறைச்சி கோழி வளர்க்க உதவி அளிக்கப்படுகிறது.

100கோழிகள் கொண்ட பண்ணை அமைக்க 4 ஆயிரத்து 413 ரூபாய் செலவாகும். அதில 2 ஆயிரத்து 207 ரூபாய் மான்யமாகவும் 2ஆயிரத்து 206ரூ தேசிய உடமையாக்கப்பட்ட வங்கிகள் மூலம் கடனாகவும் கொடுக்கப்படுகிறது.

சென்னைநகரில் மக்கள் நடமாட்டம் அதிகம் உள்ள பகுதிகளில் காலையிலும் மாலையிலும் ''வேன்' களின் மூலம் சமைத்த கோழி இறைச்சி விற்பனை செய்ய திட்டமிட்டுள்ளோம்.

மிகவும் நவீன முறையில் சுத்தமாகவும், நல்ல சுவையுடனும் குறைந்த விலையில் இந்த நடமாடும் வேன்களில் கோழி இறைச்சி அவித்த முட்டை ஆகியவை விற்பனை செய்யப்படும்

இவ்வாறு கல்யாணி ராமசாமி கூறினார்.

---

# மதிய உணவு சமையல் கூடங்களுக்கு நவீன அடுப்புகள்

கோவை, மே. 28- மதிய சத்துணவு தயாரிக்கும் சத்துணவு சமையற் கூடங்களுக்கு நவீன அடுப்புகள் வழங்கப்பட உள்ளன.

இந்த நவீன அடுப்பின் பெயர் ''பிரியாக்னி'' இந்த நவீனரக அடுப்பு சாதாரண அடுப்பைவிட 25 சதவிகிதம் விறகை மிச்சப்படுத்தும் திறன் கொண்டது.

இப்படிப்பட்ட அடுப்புகள் 300ஐ சத்துணவு மையங்களில் வைக்க தமிழக அரசு நடவடிக்கையெடுத்துள்ளது

இந்த அடுப்பின் விலை ரூபாய் 35 முதல் 75 வரை இருக்கும்.

இந்த அடுப்பில் விரைவில் சமைக்க முடிவதோடு அடுப்பு [illegible] அல்லது [illegible] தேவையில்லை என்று இந்த நவீனரக அடுப்பை உற்பத்தி செய்யும் அதிகாரி தெரிவித்தார்.

சாமக்குளம், காட்டுகுளத்தூர் வட்டாரங்களில சுமார் 5 ஆயிரம் குடும்பத்தினருக்கு மத்திய அரசு இந்தரக அடுப்பை இலவசமாக விநியோகித்துள்ளது என்றும் அந்த அதிகாரி தெரிவித்தார்.

---

பஞ்சாபில்

## வியாபாரி சுட்டுக் கொலை

கபூர்தாலா, மே 28- கபூர்தாலா மாவட்டம் மகாடலிபூர் கிராமத்தில் ஒரு வியாபாரி சுட்டுக் கொல்லப்பட்டார்

நேற்றுஇரவுசுமார்8.30 மணி அளவில் இந்தச் சம்பவம் நடந்தது 65 வயதான அந்த வியாபாரி தனது கடையில் இருந்தபோது தீவிரவாதிகள்சிலர் அவரை துப்பாக்கியால் சுட்டு பிணமாக்கினார்கள்,

---

## நெய்வேலியில் வெற்றிவிழா

நெய்வேலி, மே 28- தஞ்சை, உப்பிலியாபுரத்தில் நடந்த இடைத்தேர்தலில் கழகக் கூட்டணி பெற்ற மகத்தான வெற்றியையொட்டி நெய்வேலியில் மாபெரும் வெற்றிவிழா ஊர்வலம் கடந்த 23-ம் தேதி மாலை நடைபெற்றது,

கழகம் மற்றும் மன்றத் தோழர்கள் தொழிற் சங்கத் தோழர்கள மகளிர் பிரிவினர் மாணவ மாணவியர், இந்திரா காங்கிரஸ், ஐ. என். டி. யு. சி தோழர்கள் பலரும் கலந்து கொண்டனர்.

ஆர். முத்துக்குமரன் எம். பி., முன்னிலையில் ஏ. தங்கராஜு எம்.எல்.ஏ. ஊர்வலத்தை துவக்கி வைத்தார். இரத்தின ராமகிருஷ்ணன், எஸ். மாடசாமி, நம்மாழ்வார், முத்துரெட்டியார் மற்றும் பலர் கலந்து கொண்டு சிறப்பித்தனர்.

---

சத்துணவு கூடங்களைப் பயன்படுத்தி

# குழந்தைகளுக்கு நல்ல சுகாதார பழக்கங்கள்

## பிரபல குழந்தைகள் நோய் நிபுணர் யோசனை

**சேலம், மே. 28. குழந்தைகளிடம் நல்ல சுகாதாரப் பழக்கங்களை ஏற்படுத்த சத்துணவுக்கூடங்களை பயன்படுத்திக் கொள்ளலாம் என்று பிரபல குழந்தைகள் நோய் நிபுணர் டாக்டர் வி. பாலகோபாலராஜு யோசனை கூறினார்,**

இந்திய குழந்தைகள் நோய் அகாடமியின் தமிழ்நாட்டு கிளையின் 9-வது வருடாந்திர மாநாடு சேலத்தில்நடைபெற்றது.

இந்த மாநாட்டை தொடங்கி வைத்து டாக்டர் பாலகோபாலராஜு பேசினார்.

அப்போது அவர் கூறியதாவது:—

முதல்வர் புரட்சித் தலைவரின் திட்டத்தில் இன்று பல இலட்சம் ஏழைக் குழந்தைகள் சத்துணவு சாப்பிடுகிறார்கள்.

குழந்தைகளிடம் நல்ல சுகாதாரப் பழக்கங்களை ஏற்படுத்த சத்துணவுக் கூடங்களைபயன்படுத்திக் கொள்ளலாம். குழந்தைகள் குடிப்பதற்கு சுத்தமான காய்ச்சிய நீரை வழங்கலாம்.

ஏன் இதைச் சொல்கிறேன் என்றால் தண்ணீர் தாராளமாகக் கிடைக்கும் காலத்தில் இருந்ததைவிட தண்ணீர்ப் பற்றாக்குறை காலத்தில் பேதி நோயால் அவதிப்பட்ட குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாக இருந்தது. சென்னை எழும்பூர் குழந்தைகள் நல மருத்துவமனையில் இதனைக் கண்டேன்.

### குழந்தைகள் நலன்

ஆகவே தான் குழந்தைகளுக்கு சுத்தமான காய்ச்சிய நீரை தரவேண்டும் என்று கூறுகிறேன்.

இன்று சுகாதார நல திட்டங்களை பல சமூக சேவை அமைப்புகள் ஏற்று செயல்படுத்தி வருகின்றன. அவைகளுக்கு இடையே ஒருங்கிணைப்பு இல்லாததால் சிகிச்சை தரப்பட்ட குழந்தைக்கே மீண்டும் மீண்டும்சிகிச்சை அளிக்கப்படுகிறது. இதனால் மற்ற குழந்தைகள் கவனிக்கப்படாத நிலை ஏற்படுகிறது.

இதனைப்போக்க சமூக சேவை அமைப்புகளின் நடவடிக்கைகளை முறைப்படுத்த ஒரு மத்திய அமைப்பை ஏற்படுத்தினால் எல்லா குழந்தைகளின் நலன் பரவலாக கவனிக்கப்படும் நிலை உருவாகும்.

இவ்வாறு டாக்டர் பாலகோபாலராஜு கூறினார்.

இந்த மாநாட்டிற்கு டாக்டர் ஆர். நர்மதா தலைமை வகித்தார். டாக்டர் எஸ். அருணாசலம் வரவேற்புரையாற்றினார் டாக்டர் மெர்வின் ஓ. ஜோசப் அறிக்கை வாசித்தார். மேட்டூர் கெமிக்கல்ஸ் நிறுவன பொது மேலாளர் டி. சேஷசாயி இந்திய குழந்தைகள் நோய் அகாடமியின் செய்திச் சுருளை வெளியிட்டார்.

---

# ஏக்கருக்கு 2 டன் நெல் உற்பத்தி குறியளவு: கழக அரசு நடவடிக்கை

திருச்சி மே. 28- ஒரு ஏக்கர் நிலத்தில் 2 டன் நெல்லை உற்பத்தி செய்ய வேண்டும் என்று தமிழக அரசின் குறியளவு நிர்ணயிக்கப்பட்டுள்ளது

கோவை விவசாயக் கல்லூரி பேராசிரியா ஆர். கே. சிவணப்பன், திருச்சியில் நடந்த கருத்தரங்கில் கலந்து கொண்டு உரையாற்றினார்.

காவிரி பாசனப் பகுதிகளில் பாசனத்திற்கான தண்ணீர் ஆதாரங்கள் பற்றிய நிர்வாகக் கருத்தரங்கு திருச்சியில் நடைபெற்றது.

இந்தக் கருத்தரங்கை கோவை விவசாயக் கல்லூரி பேராசிரியர் ஆர். கே. சிவணப்பன துவக்கி வைத்தார்

அப்போது அவர் கூறியதாவது:—

காவிரி நீரைப் பயன்படுத்தி பாசனம் செய்யும் நெல் உற்பத்தி நல அளவை குறைத்து நெல் உற்பத்தியை அதிகரிக்க நடவடிக்கை எடுக்கப்படவேண்டும்.

ஒரு ஏக்கர் நிலத்தில் நெல் உற்பத்தி அளவை அதிகரிப்பதன் மூலம் இந்த தண்ணீரை வேறு பயிர்களைப் பயிரிட பயன்

1ம் பத்தி பார்க்க

---

## மேட்டூர் நீர் மட்டம் 81 அடி

திருச்சி, மே. 28- மேட்டூர் அணையின் நீர் மட்டம் நேற்று ஞாயிறு அன்று 80 95 அடியாக இருந்தது.

அணைக்கு விநாடிக்கு 3425 கன அடி நீர் வந்து கொண்டு இருக்கிறது.

அணையில் இருந்து 12 0 கன அடி நீர் விடப்படுகிறது.

தமிழகத்திலுள்ள

# ‘இலங்கை தமிழ் இளைஞர்களை ஒப்படைக்கக்கூடாது’

## பிரேமதாசாவின் பேச்சுக்கு அமிர்தலிங்கம் கண்டனம்

**சென்னை, மே 28- தமிழகத்திலுள்ள இலங்கைத் தமிழ் இளைஞர்களை ஒப்படைக்க வேண்டும் என்று பிரேமதாசா கோரியுள்ளதற்கு இலங்கை தமிழர் தலைவர் அமிர்தலிங்கம் கண்டனம் தெரிவித்துள்ளார். தமிழ் இளைஞர்களை இலங்கையிடம் ஒப்படைக்ககூடாது என்றும் அவர் கூறியுள்ளார்.**

தனிநாடு கேட்கும் விடுதலைப் புலிகளுக்கு பிரதமர் இந்திரா ஆதரவு காட்டுகிறார். இலங்கை மீது இந்தியா படையெடுக்கத் தயாரா என்று இலங்கை பிரதமர் பிரேமதாசா சவால் விடுத்திருந்தார்.

அவருக்கு பதில்அளித்து இலங்கைதமிழர் தலைவர் அமிர்தலிங்கம் வெளியிட்டுள்ள அறிக்கையில் கூறியிருப்பதாவது:-

தமிழர் பிரச்சினையில் இந்தியா செய்து வரும் சமரச முயற்சியை குலைப்பதற்காக இலங்கை செய்யும் சதிதான் இது.

கடந்த ஜூலை மாதம் இலங்கையில் இனக் கலவரம் மூண்டபோது அதை நிறுத்த இந்தியா முன்வந்தது அப்போது அந்த முயற்சியை ஏற்றுக் கொண்ட இலங்கை இப்போது முற்றிலும் மாறிவிட்டது

### நடுவர் நிலையில்...

இந்தியாவுக்கும் ஐ. நா. சபை மனிதஉரிமை கமிஷனுக்கும் அளித்த வாக்குறுதிகளில் இருந்து இலங்கை பின்வாங்கி விட்டது. ஆகவே இந்தியாவும், ஐ. நா. சபையும் அடுத்த நடவடிக்கைகளை எடுக்கவேண்டியது தான் முறை,

இலங்கைபிரச்சினையை தீர்க்க இந்தியா நடுவர் நிலையில்தான் செயல்படுகிறது.

இலங்கை தமிழர்களையும் அனைத்துக் கட்சிக் கூட்டத்தில் கலந்து கொள்ள வைத்தது இந்தியா தான்.

இலங்கை ராணுவம் தமிழர்களுக்கும் அனைத்துக் கட்சி மாநாட்டுக்கும் எதிராக செயல்படும் போது அந்த அட்டூழியங்களைத் தடுத்து நிறுத்தும்படி இந்தியா கூறுவது சரிதான்.

யாழ்ப்பாணத்தில் நடக்கும் அட்டூழியங்களுடன் பஞ்சாப் கலகத்தை ஒப்பிடக்கூடாது.

### கொன்று விடுவார்கள்

யாழ்ப்பாணத்தில் சிங்கள வெறிபிடித்த ராணுவம் தமிழர்களைஒழித்துக் கட்டப்பாக்கிறது. ஆனால் பஞ்சாபில் நடப்பது அப்படி அல்ல.

தமிழ்நாட்டில் இருக்கும் இலங்கை தமிழ் இளைஞர்களை ஒப்படைக்கும்படி இலங்கை கேட்கிறது அதை இந்திய அரசாங்கம்ஏற்கக்கூடாது அப்படி ஒப்படைத்தால் அவர்களை கொடுமைப் படுத்தி கொன்று விடுவார்கள்.

தமிழ்நாட்டில் தஞ்சம் புகுந்து இருக்கும் இலங்கை தமிழ் இளைஞர்கள் பயங்கர வாதிகள் என்பதற்கு ஆதாரம் இல்லை.

அமெரிக்க தம்பதிகளை பணயக கைதிகளாகபிடித்தவர்களுக்கும் அவர்களுககும் சம்பந்தம் இல்லை

கடத்தியவர்கள் இலங்கையில் உள்ளவர்கள் தான், திறமை இருந்தால் இலங்கை அரசாங்கம் அவர்கள இருக்கும் இடத்தை கண்டுபிடித்து கைது செய்யட்டும்.

### இஸ்ரேலுக்கு வசதி

சென்னையில் உள்ள தமிழ இளைஞர்களை ஒபபடைக்கும்படி பிரேமதாசா கேட்பது கடத்தல் காரர்களை அவர்களால் பிடிக்க முடியவில்லை என்பதையே காட்டுகிறது.

ஒரளவுஇஸ்ரேல் நாட்டினருக்கு அனுமதி கொடுத்து இருப்பதாக இலங்கை கூறுவது ஆபத்தானது.

மனித உரிமைகளை பறித்து ஐ. நா. சபை கட்டளையை மீறிய இஸ்ரேல்ஆசியாவில்காலூன்ற இலங்கை அரசாங்கம் வசதி செய்து இருக்கிறது.

இதுவரை இலங்கைக்கு உதவி செய்து வரும் அரபு நாடுகள் இதை கவனிக்க வேண்டும்.

### புறக்கணிக்க வேண்டும்

இஸ்ரேல் நாட்டினர்வர அனுமதி கொடுப்பதற்கு இலங்கை முஸ்லிம்களும் எதிர்ப்பு தெரிவிக்கவேண்டும்.

இலங்கையில் நடக்கும் ராணுவ அட்டூழியங்களை கண்டிக்க சர்வதேச நாடுகள் ஏதாவது ஒரு வகையில் அதை புறக்கணிக்கவேண்டும்.

ஐ. நா. சபை மனித உரிமை கமிஷனுக்கு ஏற்கனவே ஒரு மனு கொடுத்திருக்கிறோம் அதன் மீது நடவடிக்கை எடுப்போம் என்று மனித உரிமை கமிஷன் தெரிவித்து இருக்கிறது.

இவ்வாறு அமிர்தலிங்கம் கூறியிருக்கிறார்.

---

## மங்கல நன்னீராட்டு விழா

சென்னை, மே. 28— கழக தோழர் எம். வி. ராமனின் மூத்தமகள் சாந்திக்கு மங்கல நன்னீராட்டு விழா வரும் ஜூன் மாதம் 4ம் தேதி மாலை 7 மணிசகு சென்னை கொண்டியம் பதி நவநீத கோவிந்த மகாலில் (ஜார்ஜ் டவுன் கூட்டுறவு வங்கி எதிரில்) நடைபெற வருக்கிறது.

அமைச்சர் ராகவானந்தம் சட்ட மேலவை உறுப்பினர்கள் ஜேப்பியார் காடு வெட்டிகண்ணப்பன் ஈ. மதுசூதனன், பா. அங்கமுத்து சட்டசபை உறுப்பினர்கள் வரகூர் பெருமாள், ரங்கசாமி, ஐசரிவேலன், திருவை அண்ணாமலை, புலவர் வேதா, வெ. மாயன், கு க. செல்வம், எஸ். ஏ. ராஜபாண்டியன், சைதை துரைசாமி, திநகர் மூர்த்தி ஜெ. பாலன, மயிலை தமிழ்மணி, வ. கோதண்டராயன், இரா. சோமசுந்தரம், மு. அன்புத்தம்பி, சி. ஜெயபால்மற்றும் கழக தோழர்கள் வாழ்த்துரை வழங்குவார்கள்.

ஏ. வி, கிருஷ்ணமூர்த்தி வரவேற்பார்,

---

செங்கை மாவட்டத்தில்

# சிறு தொழில்களுக்கு அனுமதி வழங்க குழு அமைப்பு

**செங்கற்பட்டு, மே 28 செங்கற்பட்டு மாவட்டத்தில் சிறு தொழில்களுக்கு அனுமதி வழங்க குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.**

தமிழகத்தில் சிறு தொழில் வளர்ச்சிக்கு கழக அரசு பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருவது தெரிந்ததே.

செங்கற்பட்டு மாவட்டத்தில் சிறு தொழில்கள் தொடங்க விரைந்து அனுமதி பெற்றிட அரசு மாவட்ட அளவில் குழு ஒன்று அமைக்கப்பட்டுள்ளது.

இக்குழுவிற்கு மாவட்டக் கலெக்டர் தலைவராக இருப்பார்,

மாவட்ட தொழில் மைய பொது மேலாளர் குழுவின் அமைப்பாளராக இருப்பார்.

மற்றும் குழுவின் உறுப்பினர்களாக தமிழ்நாடு மின் வாரிய சார்பில் ஒருவரும், சுற்றுப்புற சூழல் வாரியத்தின் சார்பில் ஒருவரும் இருப்பார்கள்.

இக் குழு மாதத்தில் 2 தடவை கூடி சிறு தொழில்கள் குறித்தபிரச்சினைகளை விவாதிக்கும் என தெரிவிக்கப்பட்டுள்ளது.



---

வரிசையாக நிற்கவைத்து

# 15கிராமவாசிகளை சுட்டுக் கொன்ற கொள்ளைக்காரி

## உத்திரபிரதேச மாநிலத்தில் நடந்த பயங்கர சம்பவம்

**லக்னோ, மே 28- ஒன்றுமறியாத அப்பாவிகிராமவாசிகளை வரிசையாக நிற்கவைத்து ஒரு கொள்ளைக்கூட்டத்தினர் சுட்டுக் கொன்றனர் இதில்15பேர் உயிர் இழநதனர் ஒரு பெண்ணையும் அவளுடைய குழந்தையையும் வீட்டில் வைத்து பூட்டி உயிரோடு கொளுத்தினர்.**

இந்த ஈவிரக்க மற்ற வெறிச் செயல் உத்திரப் பிரதேசத்தில் எட்டாவா மாவட்டத்தில் உள்ள அஸ்தா என்னும் கிராமத்தில் நடந்தது.

இது பற்றிய விவரம் வருமாறு:-

கடந்த20-ந்தேதிஜலான் மாவட்டத்தை சேர்ந்த ரோமாய் என்ற கிராமத்தில் ஜகதீஷ் மல்லா என்ற கொள்ளைக்காரன் தாகூர் இனத்தை சேர்ந்த மூவரை படுகொலை செய்தான்.

இதனால் தாகூர் இனத்தை சேர்ந்த லாலாராம், ஸ்ரீராம் என்ற கொள்ளைக்காரர்களுக்கு ஆத்திரம் ஏற்பட்டது. பழிக்குப்பழிவாங்க தீர்மானித்தனர்.

அஸ்தா கிராமத்தில் வசிப்பவர்களில் பெரும்பாலோர் மல்லா இனத்தை சேர்ந்தவர்கள் இவர்களைக் கொன்று குவிப்பது என்று லாலாராமும் ஸ்ரீராமும் முடிவு செய்தனர்.

சம்பவ தினத்தன்று மாலை 5-30 மணிக்கு ஆறு கொள்ளைக்காரர்களுடன் லாலாராமும் ஸ்ரீராமும் அஸ்தா கிராமத்தில் துப்பாக்கிகளுடன் நுழைந்தனர்

‘டுமீர்! டுமீர்!’ என்று சுட்டு கிராமவாசிகளை அச்சுறுத்தினர்.

‘வீட்டைவிட்டு வந்து எல்லோரும் வரிசையாக நிற்க வேண்டும். இல்லாவிட்டால் அத்தனை பேரையும் கூண்டோடு கைலாசம் அனுப்பிவைப்போம்’ என்றுகொள்ளைக்காரர்கள் குரல் கொடுத்தனர்.

### பெண்கள் அலறல்

மிரண்டுபோன கிராமவாசிகள் உயிரைக்கையில் பிடித்தவாறு வரிசையாக நின்றனர்.

அவர்களில் சிலரைப் பிடித்து ஒரு வீட்டிற்குள் அடைத்து கதவைதாளிட்டனர். பின்னர் அந்த வீட்டிற்கு தீவைத்தனர்.

உள்ளே மாட்டிக் கொண்டவர்கள் ‘ஐயோ! அம்மா!’ என்று அலறினார்கள் இதைப்பார்த்து கொள்ளைக்காரர்கள் அட்டகாசமாய் சிரித்தார்கள். இந்த தீவைப்பில் ஒரு பெண்ணும் அவளது குழந்தையும் உடல் கருகி செத்தனர்.

லாலாராமுக்கும் ஸ்ரீராமுக்கும் அக்கிராமத்தில் ஒரு ஆசைநாயகி உண்டு. அவள பெயர் குசுமா நெய்ன்.

வரிசையாக நின்றிருக்கும் அப்பாவிக்கிராமவாசிகளை குருவியை சுடுவது போல சுட்டுத்தள்ளுமாறு கொள்ளைக்காரர்கள் குசுமாவிடம் துப்பாக்கியை கொடுத்தனர்.

### வெறி பிடித்தது...

கண்களில் வெறிதாண்டவமாட தான் பெண் என்பதையே மறந்து பேயாகி விட்ட குசுமாசரமாரியாக துப்பாக்கியால் சுட்டாள்.

அதில் வரிசையாய்நின்றிருந்த 15கிராமவாசிகளின் உடல்களை குண்டுகள் சல்லடைக் கண்களாக துளைத்தன. அவர்கள் அங்கேயே ரத்த வெள்ளத்தில் மிதந்தனர்.

குண்டடிபட்டும் ஒருவன் எப்படியோ தப்பி ஓடிவிட்டான்.

“பெஹமாய் கிராமத்தில் நடந்ததைவிட கொடூரமான பாடம் கற்பிப்போம்” என்று கொள்ளைக்காரர்கள் ஆவேசமாக முழக்கமிட்டதாக நேரில் பார்த்த ஒருவர் கூறினார்.

### பூலான்தேவி போல்...

(சில ஆண்டுகளுக்கு முன்பு கொள்ளைக்காரி பூலான்தேவி தன்னைவஞ்சித்த பெஹமாய் கிராம வாசிகளை சுட்டுத்தள்ளியதில் 21 பேர் மாண்டனர்).

அஸ்தா கிராமத்தில் இப்படி பயங்கர சம்பவம் நடந்துகொண்டிருந்த போது ரோந்து வந்த போலீஸ் அதிகாரி போலீஸ் படையுடன் கொள்ளைக்காரர்களை பிடிக்க முனைந்தார். ஆனால் அவர்களுக்கு ‘டிமிக்கி’ கொடுத்துவிட்டு கொள்ளைக்காரர்கள் தப்பி ஓடிவிட்டனர்.

இந்த படுகொலைபற்றி கேள்விப்பட்ட உத்தரப் பிரதேச முதல்வர் ஸ்ரீபதி மிஸ்ரா விமானம மூலம் அஸ்தா கிராமத்திற்கு விரைந்தார் அங்கு நடந்தவற்றை நேரில் கேட்டு அறிந்தார்.

கொள்ளைக்காரர்களைப்பிடிக்க விரைவான நடவடிக்கை மேற்கொளளுமாறு போலீசாருக்கு உத்தரவிட்டார்,

---

இந்தியாவிலுள்ள விடுதலைபுலிகளை

ஒப்படைக்காவிட்டால் ...

# ஐ. நா. வில் புகார் கூறுவார்களாம்: இலங்கை மிரட்டல்

**கொழும்பு. மே 28- இந்தியாவில் உள்ள விடுதலைப் புலிகளை இலங்கையிடம் ஒப்படைக்காவிட்டால் ஐ நா. வில் புகார் செய்வோம என்று இலங்கை மிரட்டியுள்ளது.**

இலங்கையின் வடக்கு, கிழக்கு பகுதிகளில் தமிழர்கள் பெரும்பான்மையாக வசிக்கிறார்கள.

அந்த பகுதியை தனி சுதந்திர நாடு (‘தமிழ் ஈழம்’) ஆக்க வேண்டும் என்று தமிழ் விடுதலைப் புலிகளும் இதர தமிழ் இளைஞர் அமைப்புகளும் போராடி வருகின்றன.

விடுதலைப் புலிகளுக்கு தமிழ் நாட்டில் புகலிடம் கொடுக்கப்பட்டு இருப்பதாகவும் அவர்களுக்கு ரகசியமாக போர்பயிற்சி அளிக்கப்படுவதாகவும் இலங்கை அரசாங்கம் குற்றம் சாட்டியுள்ளது

விடுதலைப் புலிகளையும், தீவிர இளைஞர்களையும் தங்களிடம் ஒப்படைக்க வேண்டும் என்று இலங்கை அதிபர் ஜெயவர்த்தனா கோரியுள்ளார்.

இதுகுறித்து இலங்கை அரசு அதிகாரி ஒருவர் கூறியதாவது:-

இலங்கையில் விடுதலைப்புலிகள் தனித் தமிழ்நாடு கேட்டு போராட்டம் நடத்தி வருகின்றனர்.

இவர்களில் சிலருக்கு இந்தியாவில் குறிப்பாக தமிழ்நாட்டில் அடைக்கலம் கொடுத்திருக்கிறார்கள் அவர்களை இலங்கையிடம் ஒப்படைக்கும்படி அரசு வேண்டுகோள் விடுத்து இருந்தது. ஆனால் இதுவரை அதற்குசரியான பதில் இல்லை.

இந்த விடுதலைப் புலிகள் பற்றி தனியாக விசாரிப்பதற்காக உயர் அதிகாரிகள் அடங்கிய ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது இந்தகுழு அகில உலக சட்டப்படி, விடுதலைப்புலிகள் பற்றிய பிரச்சினையை இந்தியாவிடம் எடுத்துச் சொல்லி தகுந்த பரிகாரம் காண முயற்சி செய்யும்

இந்தியா அதற்கு சரியான முறையில் பதில் அளிக்காவிட்டால் இந்த பிரச்சினை பற்றி ஐ. நா சபையில் புகார் செய்வோம். அதோடு கூட்டு சேரா நாடுகள் இயக்கத்திலும் இந்தபிரச்சினையை எழுப்புவோம்

இவ்வாறு அந்த அதிகாரி கூறினார்,

---

அமெரிக்கவில் தேசாய் தொடர்ந்துள்ள வழக்கு

## நிக்சன் சாட்சி கூறுகிறார்

சிகாகோ, மே, 28— இந்திய முன்னாள பிரதமர் மொரார்ஜி தேசாய், பத்திரிக்கையாளர் செய்மூர்ஹெர்ஸ் மீது மான நட்ட வழக்குப் போட்டுளளது தெரிந்ததே

கடந்த 3 நாட்களாக மொரார்ஜி தேசாய்சாட்சியமளித்து வருகிறார்.

இந்த வழக்கில் அமெரிக்க முன்னாள ஜனாதிபதி நிக்சன், முன்னாள வெளிநாட்டு அமைச்சர் கிசிங்கர் ஆகியோரும் சாட்சியம் அளிக்கிறார்கள்.

தேசாயை சி. ஐ. ஏ. உளவாளி என செய்மூர் குறிப்பிட்டிருந்தார்.

## சோழர்கால ஓடுகள் கண்டுபிடிப்பு

தஞ்சை, மே 28— தமிழ்ப்பல்கலைக்கழகம் கல்வெட்டியல் துறையின் தொல்லியல் பிரிவு கடந்த இரு மாதங்களாக தஞ்சைக்குஅருகில்உள்ளவல்லம் கோட்டைப் பகுதியில் அகழ்வாராய்ச்சி செய்தத்தில் வல்லத்தின் பழமையைப் பற்றிய சில புதிய செய்திகள் கிடைத்துள்ளன.

கி. பி. இரண்டு அல்லது மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த தமிழி (அல்லது பிராமி) எழுத்தில் எழுதிய சில பானை ஓடுகள் கிடைத்துள்ளன.

இதே காலத்தைச் சேர்ந்த தட்டையான, வரிகளுள்ள கூரை ஓடுகளும் கிடைத்துள்ளன.

கிறிஸ்துவுக்கு முந்தைய காலத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் எலும்பு அம்பு முனைகள் சில தமிழ்நாட்டில் முதன் முதலில் இங்கு தான் கிடைத்துள்ளன.

## நாசிக்கில் வீடுஇடிந்து 4 பேர் சாவு 10 பேர் காயம்

நாசிக், மே. 28— அகமதநகர் பகுதியில் நாசிக்கில் ஒருவீடுஇடிந்து விழுந்தது.

இதில் 4 வயது முதல் 12வயதுக்குட்பட்ட 3 சிறுமிகளும் 6 மாதக் குழந்தையும் உயிரிழந்தன.

காயமடைந்தவர்கள் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

---

பம்பாயில் நடைபெறும்

# கலவரப் பகுதிகளை பார்வையிட வந்த இமாமுக்கு தடை

## விமான நிலையத்தில் நாள் முழுதும் தங்கி விட்டுத் திரும்பினார்

**பம்பாய், மே 28- மராட்டிய மாநிலத்தில் கலவரப்பகுதிகளை பார்வையிட வந்த டெல்லி ஜமாமஸ்ஜித் இமாமுக்கு தடை விதிக்கப்பட்டது**

மராட்டிய மாநிலத்தில் பிவாண்டி, தானே, பம்பாய் பகுதிகளில் நடந்த வகுப்புக் கலவரத்தில் 225 பேர் உயிரிழந்தனர். பல லட்சக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சொத்துக்கள் சேதம் அடைந்தன.

கலவரம் நடந்த பகுதிகளை நேரில் பார்வையிட டெல்லி ஜமா மஸ்ஜித் இமாம் சையதுஅப்துல்லா புகாரி விமானம் மூலம் பம்பாய்க்கு வந்தார்.

அவர் நகருக்குள் நுழைய போலீசார் அனுமதி தர மறுத்தனர்.

உடனே இமாம் புகாரி மராட்டிய முதல்வர் வசந்த் தாதாபாட்டீலுடன் தொடர்புகொள்ள முயன்றார் முடியவில்லை.

ஒருநாள் முழுவதும் விமான நிலையத்தில் இருந்துவிட்டு பின்னர் டெல்லிதிரும்பினார்.

கலவரப்பகுதிகளில் இப்போது சகஜநிலை திரும்பிய போதிலும் பண்டுப், டிராம்பே, கோர்வாடி, ஜோகேஸ்வரி உள்பட பல இடங்களில் இரவு 10மணியிலிருந்து விடிகாலை 4-மணி வரை ஊரடங்கு உத்தரவு இன்றும் அமலில் இருக்கும்.

### மத்திய அமைச்சர்கள் ஆறுதல்

மத்திய நிதியமைச்சர் பிரணாப்முகர்ஜி, ரயில்வே ராஜாங்க அமைச்சர் ஜாபர் ஷெரீப், பாசனத்துறை ராஜாங்க அமைச்சர் இசட். ஆர். அன்சாரி ஆகியோர் கலவரம் நடந்த பகுதிகளை பார்வையிட்டனர். நிவாரண முகாம்களுக்கு சென்று ஆறுதல்கூறினார்கள்.

பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவாரண உதவியாக பாரதஸ்டேட்பாங்க் 5 லட்ச ரூபாயை அளிப்பதாக மத்திய அமைச்சர் பிரணாப்முகர்ஜி அறிவித்தார்.

---





PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34 NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN